# மூலிகை மணி



வேலூர் மருத்துவர் :- ஆ.இரா.கண்ணப்பர்

மலர்: 12 இதழ்: 9

## 196 - வது மூலிகை



# 'மூலிகை மணி'

[தமிழ் மருத்துவத் திங்கள் இதழ்]

ஆசிரியரும் வெளியிடுபவரும்

தினமணி புகழ்

வேலூர் மருத்துவர் ஆ. இரா. கண்ணப்பர், R.M.P.

ஆண்டு சந்தா ரூ. 6-00 தனி இதழ் 0-50 பைசா

---

ஆடி இதழில்

(சிறப்புக் கட்டுரைகள்)



---


மூலிகைமணி சந்தா விபரம்

| உள் நாடு | மலேஷியா, சிங்கைக்கு |
|---|---|
| 1 ஆண்டு 6-00 | கப்பல் வழி 13-20 விமான மூலம் 20-40 |
| 3 ஆண்டு 18-00 | கப்பல் வழி 39-60 விமான மூலம் 61-20 |
| ஆயுள் சந்தா ரூ. 160 | ஆயுள் சந்தா ரூ. 200 (கப்பல் மூலம்) |


---

தலைமை அலுவலகம் : மூலிகை மணி, வேலூர் - 632001
சென்னை அலுவலக முகவரி : மூலிகை மணி, 7, அருளாம்பாள் தெரு, தி. நகர், சென்னை - 600 017.
தொலை பேசி : 445689 (சென்னை)

---

உ

# அருட்குரல் கொடுக்க வாராய்!

ஃ

ராகம்: தர்பார்] [தாளம்: ஆதி

பல்லவி

ஆடும் கலைமயில் ஏறும் அழகா! — உன்
அருட்குரல் கொடுக்க அருகில் வாராயோ? (ஆடும்)

அநுபல்லவி

நாடு நலமெலாம் நல்கியே மகிழும் நீ
நலிந்தோர் துயர்கெட நாளும் துணையிருக்க
(ஆடும்)

சரணம்

ஆண்டியைப் போலும் அமைய நின்றவா!
ஆசைகள் வெறுத்தவா! அன்பினை வளர்த்தவா!
வேண்டிய மூலிகை மணிபோல் கனிந்தவா!
மெய்யான உலகம் மெய்ப்பட வா! வா! (ஆடும்)

கவிக்குயில் தேவராசன்.



## வாசகர்கட்கு அரிய வாய்ப்பு

[1] மூலிகைகளை அறிதல்,

[2] கற்கம், சூரணம், மாத்திரை, பற்பம், செந்தூரம், லேகியம், தைலம், ஆகியன செய்தல்,

[3] நோய் கணித்தல்,

[4] நாடிப் பார்த்தல்,

[5] 35 வகையான முக்கிய நோய்களை பற்றி விளக்கமாக அறிதல், என்னும் 5 வகையில் அடங்கும்

## மூலிகைமருத்துவவகுப்புகள்

வருகின்ற அக்டோபர் மாதம் சென்னையில் 'மூலிகை மணி' சார்பில் நடத்த திட்டமிடப்பட்டுள்ளது. 10 நாட்கள் நடக்கும் இவ்வகுப்புகளில் கலந்து கொள்வதன் மூலம், மூலிகை மருத்துவ அறிவை செயல் முறைப்படுத்தி நேரடி அனுபவம் பெறலாம். எழுதப் படிக்கத் தெரிந்து, மூலிகை மருத்துவத்தில் ஆர்வமுள்ள அனைவரும் இவ்வகுப்புகளில் பங்கேற்கலாம். மூலிகை மணி சந்தா அன்பர்கட்கு மட்டுமே முன்னுரிமையளிக்கப்படும். மேலும் விபரமறிய, ரூ 1க்கு அஞ்சல் தலை கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பிப் பெறலாம்.

மூலிகைமணி

7, அருளாம்பாள் தெரு,

தி. நகர். சென்னை - 600 017.



உ

முருகா

ஐந்துகரத்தினை யானை முகத்தனை இந்தினிளம்பிறை போலுமெயிற்றினை
நந்திமகந்தனை ஞானகொழுந்தனை புந்தியில்வைத்தடி போற்றுகின்றேனே




எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே. —(தாயுமானவர்)

மலர் 12 ] நள ஹு ஆடி மீ ஜுலை-76 [ இதழ் 9

## தமிழ் நாடு கவர்னர்
# மேதகு மோகன்லால் சுகாதியா
## அவர்களுக்கு வேண்டுகோள்

தமிழ் நாட்டை தற்காலம் ஒரு வேண்டப்படாத அபாயம் நிறைந்த ஓர் செடியினம் பிடித்துக் கொண்டு நகர பகுதிகளிலும் கூட பிசாசு போல் பெருவாரியாக வளர்ந்து வருகிறது.

இது தான் வேலிக் காத்தான் என்ற சீமை வேலி முள். 10 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு செடி கூட நமது தமிழகத்தில் இல்லை. இது அன்னியர்களரல் வேலிக்காகவென்று (அனுகூல சத்ருக்களின் சூழ்ச்சியால்) தமிழகத்தில் கொண்டு வரப் பட்டது. ஆரம்பத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்த இந்த 'வேலிக்காத்தான்' தற்சமயம் கண்ட கண்ட இடங்களில் வளர்ந்து அந்த இடம் அடர்ந்த காடாகவே மாறி விடுகிறது. இந்த செடியால் நமக்கு ஒரு நன்மையுமில்லை. வந்த தீமைகளில் சில:

[1] வேலிக் காத்தானாக இதைப் போட்டதில் மற்ற மூலிகை (மரம் செடி கொடிகள்) இனங்கள் இதனருகே வளர்வதில்லை. நாளடைவில் கருகி விடுகிறது.

[2] பயிர்கள் வளருமிடங்களில் இதை வேலியாக போடுவதால் இந்த வேலிக்காத்தான் தான் அதிகமாக வளருகிறதே ஒழிய அதனுள் பயிரிடும் பயிர்கள் நல்ல பயன் தராமல் எவ்வளவு பாதுகாத்தாலும் அழிந்து விடுகிறது.

[3] இந்த வேலிக்காத்தான் வெகுதீவிரமாக வளர்கிற காரணத்தால் கிராம மக்கள் இதனை விறகாக பயன்படுத்த ஆவலுடன் வளர்க்கிறார்கள். ஆனால் இதை விறகாக பயன் படுத்தும் குடும்பங்களில் இனம் தெரியாத வியாதிகளால் பீடித்து எலும்பும் தோலுமாக காட்சியளிக்கின்றனர்.

[4] இதன் முள் உடம்பில் பட்டால் வெகு சீக்கிரத்தில் ஆறுவதில்லை. மாறாக சீழ் வைத்து, வீங்கி புடைத்து வெகு வேதனை செய்து விடுகிறது.

[5] நாட்பட்ட வியாதிகள், சர்க்கரை நோயாளிகள், மேகநீர் உடையவர்களுக்கு இந்த முள் பட்டால் புடம்வைத்து கால், கை அவயங்களை எடுத்து விடுமளவுக்கு வந்துவிடுகிறது.

[6] இந்த வேலிக்காத்தான் என்ற சீமை வேலி முள் செடி கடுமையான கோடை காலத்தில் தண்ணீர் இல்லாத வெளிகளிலும் பச்சைப்பசேல் என்று தீவிரமாக வளருவது ஏன் தெரியுமா? மற்ற மரம் செடி கொடி போல் இல்லாமல் இது பிராண வாயுவை உட்கொண்டு வளருதலே தான்! மனிதர் சுவாசிக்கும் பிராண வாயுவை உட்கொண்டு வளரும் செடியை நாம் வளர்த்தால் நாம் சுவாசிப்பதற்கு பிராண வாயுவிற்கு எங்கே போவது? மேலும் மருத்துவ பயன்களாவது ஏதேனும் இந்த செடியில் உள்ளதா என்று ஆய்வு செய்தால் அதுவும் இல்லை. இதைத் தமிழக மக்கள் சிந்தித்து பார்க்க வேணும்.

குறிப்பாக நமது தமிழக கவர்னர் கவனத்திற்கு இதை குறிப்பிட விரும்புகிறது "மூலிகை மணி". இதற்கென்று; மேதகு மோகன்லால் சுகாதியா அவர்கள் ஓர் ஆய்வுக்குழுவை நியமித்து மேல்கண்ட உண்மைகளை ஆய்ந்து இந்த செடியை சட்ட பூர்வமாக தமிழகத்திலிருந்து நீக்க நடவடிக்கை எடுக்க வேண்டுகிறோம்.






# வேலமரம்

## 196-வது மூலிகை

தமிழகத்தின் தனிப்பெருங் கருணைக்கடல் என்று இறைவன் முருகக் கடவுளைப் போற்றுவார்கள் மக்கள். அவன் பெயர் கொண்ட மரமும் உளது. வேலாயுதா! வேல் முருகா, வேலா என்று அபயக்குரல் ஆடி மாதம் திருத்தணிகை செல்லும் கோடானு கோடி மக்கள் கூப்பாடு போட்டு காவடி எடுத்துச் செல்வார்கள்.

இவ்வாண்டு ஆடிமாதம் திருத்தணி வேலவனுக்கு இருமடங்கு காவடிகள் செலுத்தினதாக செய்தித் தாள்கள் கூறுகின்றன! இப்படி பட்ட சக்தி வேலாயுதனுக்கு இருந்தபோதும் அவன் பெயர் கொண்ட நம் நாட்டுக்கே உரிய இந்த வேல மரத்துக்கும் தெய்வீக சக்தி இருக்கிற தெனலாம். அதிலும், இந்த வேல மரம் வேறு எந்த நாட்டிலும் இல் லாத மூலிகை. இனம் நம தமிழ் நாட்டில் பரம்பரை பரம்பரையாகவே நம்முடன் வந்துள்ளது. ஆனல் இந்த வேல மரத்தின் இனமும், சீமை வேலி முள் காரணத்தால் தன் இனத்தைப் பெருக்கிக் கொள்ளாமல் ஒடுங்கி இப்போது அங்கொன்று இங்கொன்றுமாக காணக் கிடக்கிறது. நமது நாட்டின் துரதிர்ஷ்டமேயாகும்.

வெறும் வார்த்தை அலங்காரமல்ல இது. வேலம் என்ற ஓர் கிராமமே இருந்தது. அது இப்போதுமிருக்கிறது. வடாற்காடு ஜில்லா வாலாஜா தாலுகாவிலே இருப்பது! ஆம் திருத்தணிக்கு வேலூர் மக்கள் போகும் வழியிலே இருக்கும சிற்றூர் வேலம் என்ற பழைய கிராமம். இது நம் நாட்டு பேரறிஞர் தமிழ் மொழியை வளர்த்து விட்டு மதுரை மாநகர கல்லூரி உப அத்தியட்ஷகராக பணி புரிந்து (Vicechancellor) விட்டு மேல் நாடுகளிலும் பட்டம் பெற்ற விளங்கிய டாக்டர் மு. வரதராசனர் அவர் பிறப்பிடம் வேலம் என்ற கிராமம் தான்! அந்த காலத்தில் (அவர் பிறந்த போது) வேலமரம் நிறைய இருந்த காரணத்தினல் தானே என்னமோ? அவர் பெயர் மேனுடுகளில் எல்லாம் புகழ்ந்து வியக்கும் அளவுக்கு போற் றப்பட்டது என்ருல் வேலம் கிராமத்திற்கு பெருமை தானே!

இப்படியாக வேலம் என்ற கிராமம் தமிழகத்தில் எத்தனையோ இடங்களில் இருந்தது. திருவள்ளூருக்கு அண்மையில் திருவேலங்காடு என்ற ஊர் ஒன்றி உண்டு. அங்கும் அழகு மிகுந்த வேலங்காடு இருந்த படியால் அந்தப் பெயர் வந்தது என்று தான் கூறுவார்கள்.

வேல மரத்தின் சக்தி தான் என்ன அது மக்களுக்கு எங்ஙனம் மருத் துவ பயனுகிறது என்று காண்போம். வேலமரம் ஓர் அலங்காரமான சிறுமர வகுப்பு. இதில் கருமை வெண்மை என்ற இரு பிரிவு உண்டு.

ஒரு ஆள் உயரம் நீண்டு வளர்ந்து பிறகு கிளைகளை விட்டு பரவி நிரவலாக ஒழுங்காக வளரும். கிளைகள் அடிமரம் பரமனுக்கேற்றவாறு நான்கு திசைகளிலும் சமமாக பரவி வளரும். இதன் பூக்கள் நீலநிறமாக தொட்டால் சிணுங்கி பூ போல் மிக அழகாக இருக்கும். வேலங்காய் ஒவ்வொரு காயும் 6 அங்குல நீள முதல் 7 அங்குல நீளம் வரையில் விதைக்கேற்ற மேல் புறத்தோல் வட்ட வடிவமாக விட்டுவிட்டு கணு போல் காய்க்கும் இதனைப் பார்த்து மக்கள் கால்களில் அணியும் வேலங்காய் கொலுசு' என்று நகை செய்யும் ஆச்சாரியிடம் சொல்லி அழகுபட செய்து அணிந்து கொள்வது நமது நாட்டின் சிறப்பான வழக்கமாகும்.

சிறு கிளைகளில் கூரிய முள் உண்டு. இந்த முட்கள் ஒன்று முதல் இரண்டுஅங்குல நீளம்வரையில் வெள்ளிக் கம்பிபோல் கடினமாகயிருக்கும்

இதன் காய்களின் சாறு இரும்பை செந்தூரமாக்கி மடியவைக்கும் சக்தி கொண்டது. எனவே சித்த மருத்துவர் வேலங்காயை நாடுவார்கள். கிராமங்களில் முட்புதர் அடங்கிய செடிகொடிகள் நிறையஉண்டு. நாகதாளி முள், நெருஞ்சிமுள் இன்னும் பலவகையான சிறுசெடி கொடி வகைகள் அந்த காலத்தில் கிராமங்களில் மண்டிக்கிடந்தன. இவைகளின் மேல் கால் செருப்பு அணியாமலே கிராம மக்கள் நடந்து செல்வார்கள். அப்போது இந்த சிறு முட்கள் காலில் ஏறி ஒடித்துக் கொண்டால் என்ன செய்வார்கள்? (இப்போதிருக்கும் பிரைமரி சென்டர் போல் அந்தக் காலத்தில் ஆஸ்பத்திரிகள் கிராமங்களில் கிடையாது) 'முள்ளை முள் கொண்டு வாங்க வேண்டும்' ஓமியோபதி மருத்துவ பழமொழி. அது போல் காலில் தைத்த முள்ளை குத்தி எடுத்து வெளி வாங்க அந்த காலத்தில் 2 அங்குல நீளமுள்ள நல்ல உரப்பான வேலமரமுள் தான் முள் வாங்கியாக பயன் பட்டது. இன்றளவும் கிராமபுற மக்கள் காலில் சிறு முள் தைத்தபோது அதையெடுக்க வேலமர முள்ளைத் தான் நம்பியிருக்கிறார்கள். வேலம் முள்ளினால் வேறு முட்களை எடுத்தால் அந்த இடத்தில் ரணம், சீழ் முதலியவைகள் பிடிக்காது! வேலம் முள்ளில் இது ஒரு பெரிய ரகசியம். எவ்வளவு ஆழமாக குத்தி நோண்டினாலும் வேலமுள் ஒருஇயற்கை ஆன்டிசெப்டிக் கருவியாகவே (Antiseptic tools)திகழ்கிறது.

தமிழ் நாட்டின் மகாகவி ஔவையார் கூறுகிறார் ஒரு பாடலிலே.

''ஆலும் வேலும் பல்லுக்குறுதி

எதைப் போன்று ஒப்புவமை பின்வரும் அடிகள் விளக்குகிறது.

நாலுமிரண்டும் சொல்லுக்குறுதி''

நாலடியார் - குறள். இவை எந்த காலத்திலும் மாருத வாக்குறுதி பெற்றுள்ளதைப் போல் வேல மரத்தின் மரப்பட்டையும் குச்சியும் ஆலமர விழுதும் பற்களுக்கு வரும் எல்லாவித ஆபத்திலிருந்தும் காப்பாற்றக் கூடியது என்பதை மேற்கண்ட இரண்டுவரி பாடல்களில் விளக்கியுள்ளார். வேல மரத்தைபற்றி பண்டைய தமிழ்நூல்கள் சிறப்பாக கூறப்படுகின்றது.

## குடை

அகராதியில் உசை, அரிமேதம், குடை என்ற பெயர்கள் உண்டு. குடையென்று ஏன் இதற்கு பெயர் வந்தது என ஆய்வோமானால் தூரத்திலிருந்து நாம் ஒரு வேல மரத்தை பார்க்கும்போது அது குடை போன்ற வடிவமாகத் தானிருக்கும். நீங்களும் பார்த்து பதில் கூறுங்கள். சீமை வேலி முள் மாதிரி பிசாசு மாதிரி வளருவது போல் கிளைகளை விட்டு பூமியின் மேல் தரையோடு தரையாக இருக்காது. அழகிய குடைபோல் திகழ்ந்ததால் இதற்கு குடை என்று பெயர் வைத்து மூலிகை அகராதியில் சித்தர்கள் சேர்த்தார்கள்.

## மருத்துவப் பயன்கள்

கொழுந்து, இலை, பட்டை, வேர், பிசின், வித்து, யாவும் மருத்துவப் பயனுகும். இதன் செய்கைகள் முக்கியமாக துவர்ப்பிக்கும். உள்ளழற்சிக்கும், வறட்சிக்கும், காமம் பெருக்கி, உடல் உரமாக்கவும் பயன்படும். பிசினுக்கு மட்டும் நுரையீரல் நோய் அகற்றும் குணமுண்டு.

## பாஷாண வேகங்கள் முறிய

வேல மரத்து இலைக் கொழுந்தை அரைத்து, தயிரில் கலந்து நெல்லிக்காயளவு குடிக்க பாஷான வேகம் குறையும். ஆங்கில விஷ (விஷ பூரிதமான) மருந்துகளால் விளையும் வேர்க்காடு, அலர்ஜி என்ற நோய்களும் இந்த இலைக் கொழுந்துகளால் குணமாகும்.

## கண் சிவப்பு மாறுவதற்கு

வேல இலையை முலைப்பாலில் அரைத்து அடை போல தட்டி, சட்டியில் சூடேற்றி சூடு பொறுக்குமளவு கண் இரப்பையில் வைக்க, கண் சிவப்பெல்லாம் மாறிவிடும்.

## ஆருத இரணங்களுக்கு

இலைக் கொழுந்தை அரைத்து, நாட்பட்ட துர்நீர் ரணங்களுக்கு ஒரு வாரம் கட்டினுல் ஆருத இரணமெல்லாம் ஆறிவிடும்.

## இருமல் நீங்க

இலைக்கொழுந்தை சமஅளவு சர்க்கரை சேர்த்து அரைத்து பாலில் நெல்லிக்காயளவு காலையில் மட்டும் உட்கொள்ள நுரையீரல் சம்பந்தப்பட்ட இருமல் யாவும் குணமாகும்.

## பாதரச மருந்துகளால் உண்டாகும் கெடுதிகள் நீங்க

கருவேலன் பட்டையை இடித்து தூள் செய்து கொண்டு 10 கிராம் அளவு காலை மாலை வென்னீரில் சாப்பிட ஆங்கில முறை மருந்துகள், தமிழ் முறை மருந்துகள் பாதரசம் கலந்த மருந்துகளின் பின் விளைவுகள் வாய் வேர்க்காடு, பல் ஆட்டம், வாய் முதல் ஆசனம் வரை உண்டாகும் இரணங்கள் ரச வேர்க்காடு மருந்துகளை முறித்துவிடும். அத்துடன் பல் ரோகங்கள் சம்மந்தமான எல்லாவிதமான வியாதிகளும் நீங்கி, பற்கள் உறுதிபட்டு கெட்டியாகும். அத்துடன் சீதபேதி, மதுமேகம், காய்ச்சல், பித்த நோய்கள் முதலியவற்றிற்கு இதே பட்டைத் தூளை உள்ளுக்கு கொடுத்துவர மெதுவாக நீங்கிவிடும். இதனை

"தந்தம் இருகும் தனி சூதப்புண்ணும்
வந்த சுரம் பித்தம் மடியுங்காண்-பந்த
மருவா எகலா மலரழக மாதே
கருவேலம் பட்டைக்குக் கரண்" (கு. மு.)

இப்பாடல் விளக்குகிறது.

## கண் நோய்கள் நீங்க

பட்டையின் சாற்றை முலைப் பாலுடன் கூட்டி குழைத்து கண் இமையில் தடவ கண் நோய்க் குணமாகும்.

## மகா வாதம் முதலிய நோய்களுக்கு

கருவேலன் மரத்தின் வேரை 20 கிராம் எடுத்து இடித்து சிதைத்து நீர்விட்டு குடிநீராகக் காய்ச்சி காலை மாலை அரை டம்ளர் விதம் குடித்து

வர மகாவாதம், இரத்தக் கடுப்பு, கரப்பான் அக்னி மாந்தம், நாட்பட்ட பேதியும் போகும். இதனே,

" கருவேலின் வேர்க்கு கடுப்பி ரத்தம் மாந்தம்
பருவாதம் ஊறுகரப்பானும்—பெருகு
பெரும் பேதியும் போகும் பேச வினிக்கும்
கரும்பே! இதனைக் கருது " (கு. மு.)

இப்பாடல் விளக்குகிறது.

## தாதுபலம், அழகு பெற

5 கிராம் எடை கருவேலபிசின் துண்டு ஒன்றை வாயிலிட்டுச் சுவைத்து அதிலிருந்து ஊறும் ரசத்தை விழுங்கி கொண்டிருந்தால் நுரையீரல் பற்றிய அனைத்தும் நீங்கும். இருமல் போகும். தொண்டை நோய், நெஞ்செரிச்சல் குணமாகும். எரிச்சலோடு வருகின்ற சீழ் பிரமேகத்தையும் நிறுத்தும். நீர்த்து போன சுக்கிலத்தை இறுகச் செய்து அழற்சி தணிக்கும். அத்துடன் அழகையும் பலத்தையும் உண்டாக்கும். 20 அல்லது 40 நாள் காலை மாலை தவருமல் செய்ய வேண்டும் இதனை,

" நீர்த்தொழுகும் விந்துவை நிலைக்க புரியுமோ,
பூத்தொழுகும் வெள்ளைதனை போக்கும்— மாத்திரமோ ?
தேசுதரு முரமுஞ் செய்யும் பெரியோராற்
பேசு கருவேலப்பிசின் " (கு. மு )

என்ற பாடலால் அறியலாம்.

அதுமட்டுமா ? மதுமேகம், வெகு மூத்திரம் உள்ளவர்களுக்குஇதன் பட்டையை குடிநீராய் உபயோகிப்பது மிக்க பயனளிக்கும். மிக முக்கியமாக இந்த கருவேலம் அழிவதற்கு காரணம் என்னவெனில் கருவேலன் பட்டையில (மதுவிலக்கு வந்த பிறகு) கள்ளச்சாராயம் காய்ச்சுவோர் மிகுந்ததால் இம்மரம் வெகுவாக அழிந்து விட்டது. இனி கருவேல மர இனக் கூட்டங்களை காடுகளாக காண்பதரிது. அந்த அளவுக்கிதை கள்ளச் சாராயம் காய்ச்சுவோர் அழித்து விட்டார்கள். இது நம் நாடு செய்த துர்பாக்கியங்களில் ஒன்று.

## தீப்பட்ட புண்கள் ஆற

கோழி முட்டை வெண் கருவுடன் கருவேலம்பட்டை சாற்றை சமமாக உரமாக்கி தீப்பட்ட புண் மீது தடவி வந்தால், தீப்பட்ட புண் விரைவாக ஆறிவிடும்.

நரம்பு வெட்டப்பட்டு இரத்தப் போக்கு நிற்காமல் போகுமானல் கருவேலன் பிசின் தூளை அதன் மேல் தூவி கட்டினுல் நின்று விடும். கருவேலன் பிசினை நெய் விட்டு வறுத்து பொடி செய்து காலை மாலை 5 கிராம் பாலில் சாப்பிட்டு வருவதால் உடல் உரமாகும். பலம் பெருகும். அழகு தரும். விந்து இறுகும்.

இத்தகைய அரும் பெரும் விஷயங்கள் மருத்துவ பயனுக்குதவும். வேலமரத்தை அழித்து விட்டனர். அந்தோ பரிதாபம்! நம் நாட்டு மக்களுக்கு என்னே மதியீனம் ? இனிமேலாவது வேல மரத்தைப் பற்றி சிந்திப்பார்களா ?

கண்டாலு வின்றளிரைக் கல்லிலரைத்துத்தயிரில்
உண்டாற் பாஷாண வெற்பமோடுங் காண்—
வந்த சிவப் பேகுமதை மாதர்பாலால் அரைத்து கண்டபாவி
வெந்த வடை கண்ணிலொத்தவே. (கு. மு.)

கண்டாலு = கருவேலமரம்.

# திருக்குறளும்

# தொழில் வளர்ச்சியும்

## (திருக்குறள் காட்டும் மருத்துவம்)

டாக்டர் லலிதா காமேஸ்வரன்,
மருந்தியல் துறைப் பேராசிரியர், சென்னை மருத்துவக்கல்லூரி
சென்னை - 600 003.



ஒரு சமுதாயத்தின் மருத்துவ வரலாறு பிற துறைகளில் வளர்ச்சியுடன் நெருங்கிய தொடர்புடையது. அதுமட்டுமல்லாமல், அந்த சமுதாயத்தின் நாகரீக வளர்ச்சியையும் காட்டுகிறது. திருக்குறளின் காலம் திட்டவட்டமாக வரையறுக்கப் படாவிட்டாலும் பொதுவாக தமிழறிஞர்களிடையே, குறைந்தபட்சம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியதாக இருக்க வேண்டும், என்ற எண்ணம் நிலவுகிறது. அந்த அடிப்படையில் பார்ப்போமானல் அன்றைய மருத்துவக் கருத்துக்கள், ஓரளவிற்கு, அன்றைய சமுதாய வளர்ச்சியை நமக்கு எடுத்துக் காட்டக் கூடியதாகும்.

திருக்குறட் பொருட்பாளில் 'மருந்து' என்ற தலைப்பில் ஒரு அதிகாரம் இடம் பெற்றிருப்பதே, மருத்துவமும், சிகிச்சை முறைகளும், அவைகளைக் கையாளும் பயிற்சியும் திறமையும் பெற்றவர்களும், சமுதாயத்தில் இடம் பெற்றனர் என்பதைச் சுட்டும். அவர்களைச் சமுதாயம் ஒப்புக் கொண்டிருந்தது. மருத்துவ முறைகள், ஏற்றுக் கொள்ளப்பட்ட வழக்கங்களாக இருந்தன, என்பன தேற்றம்.

உலகின் பல்வேறு பகுதிகளின் மருத்துவ வரலாற்றைக் காணுங்கால், துவக்க நிலையில் பூசாரிகளே மருத்துவத் தொழிலையும் செய்து வந்திருக்கின்றனர். அறியாமையின் காரணத்தால் புரியாத இயற்கை நிகழ்ச்சிகளுக்குப் பேய்கள், பூதங்கள், முன்னோர்களின் ஆவிகள் இவைகள் தான் காரணம் என்றும், இவைகளே பிணிக்கும் மூலம் என்றும், நம்பி வாழ்ந்தனர். (In all primitive societies the priest was also the healer Diseases of the body and diseases of the spirit were treated a like and healed by him. In the history of western medicine, Hippocrates a greek medical practioner, who lived before christ, is hailed as the father of modern medeine because he separated religion from medicine) அறிவு, ஆற்றல், கல்வி இவை பெருகப் பெருக நாகரீகம் வளர்ந்து ஒவ்வொரு சமுதாயத்திலும் பிணிகளைப் பற்றிய செய்திகளும், அவைகளை

நீக்கும் வழி வகைகளைப் பற்றிய செய்திகளும், சேகரிக்கப்பட்டு, அதன் விளைவாக, மருத்துவ வழி முறைகள் உருவாக்கப்பட்டப்பின், மருத்துவத் தொழில் வேறு, பூசனைகள் செய்யும் தொழில் வேறு எனக் கருதப்பட லாயிற்று. திருக்குறளில் துவக்கத்தில், 'கடவுள் வாழ்த்து' என்று ஒரு அதிகாரம் இருப்பினும், பல இடங்களில் இறப்பு, ஊழ், புத்தேளிர் வாழும் உலகு, என்றெல்லாம் குறிப்புகள் வந்துற்ற போதும், 'மருந்து' என்ற அதிகாரத்தில் கடவுள் குறித்தோ, முன் வினையைக் குறித்தோ, பேய் பூதங்களைக் குறித்தோ, எவ்விதக் கருத்தும் கூறப்படாதது, இன் றைய அறிவியல் அடிப்படையிலும், பகுத்தறிவின் அடிப்படையிலும், ஓர்த்து மகிழக் கூடியது.

வள்ளுவர் காலத்திற்கு முன்பே, பிணிக்கு பல காரணங்கள் இருக் கக்கூடும். உணவில் குற்றம், பழக்க வழக்கங்களில் தவறு, இவைகளில் நோய் ஏற்படக்கூடும், என்ற உணர்வு.

இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழி பேரிரையான் கண்நோய் — குறள். 946.

என்ற குறளில் குறிக்கப்படுகிறது. எனின், நோய்க்குறிகள் தென்பட்ட வுடன், நோயின் காரணத்தைக் கண்டுணர்ந்தால் மட்டும் போதாது; நோய்க் குறிகளைத் தனிப்பதற்கேற்ற மருந்துகளை உணர்ந்து கொடுக்க வேண்டும். ஒவ்வொரு நோய்க்கும், அதற்கேற்ற பிற மருந்துகள் உள்ளன என்பது அன்றைய மருத்துவர்களுக்குத் தெரிந்திருந்த உண்மை என்றும் குறள் தெளிவாக்குகிறது.

"பிணிக்கு மருந்து பிரம்மன்" — 1102 என்ற குறளால் ஒவ் வொரு பிணிக்கும் அதனதன் தன்மைக்கேற்ப வெவ்வேறு மருந்துகள் பழக்கத்தில் இருந்தன என்பது தெளிவு. பிணிக்குப் பரிஹாரமாக தெய் வங்களை வழிபட வேண்டும். பேய், பூதங்களின் சினத்தைத் தணிக்க பூசனைகள் போட வேண்டுமென்று கருதப்பட்டதற்கு ஆதாரமான கருத்து மறைமுகமாகத் தோன்றும்படியாக ஒரு குறள்பா கூட அமையவில்லை என்பது குறிப்பிடத் தக்கது

"மருந்து" என்ற தலைப்பில், திருவள்ளுவர் அமைத்திருக்கும் பத்து குறள்களிலும், 'நோய் வராமல் தடுப்பதே' மக்களின் முதற்கடன் என்ற கருத்தே, வலியுறுத்தப்படுகிறது. சிகிச்சை செய்வதை விடநோய் வராமல் தடுப்பதே (Prevention is better than cure) தமிழ் மருத்துவக் கொள்கையின் அடிப்படையாக இருந்திருக்கிறது என்பது தெரிகிறது.

"மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்" — குறள். 942.

"அற்ருல் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்ருன் நெடிதுய்க்கு மாறு — குறள். 943.

"மாறுபாடில்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபாடில்லை உயிர்க்கு — குறள். 945,

என்ற குறள்கள் இந்தக் கருத்தை வலியுறுத்தும்.

"மறுப்பது உடல் நோய் மருந்தெனலாகும்
மறுப்பது உள நோய் மருந்தெனலாகும்
மறுப்பது இனி நோய் வராதிருக்க
மறுப்பது சாவை மருந்தெனலாகும்

என்ற திருமூலரின் வாக்கு. நோய் வராமல் தடுப்பதே, மருத்துவத்தின் குறிக்கோள் என்ற கொள்கையே, தமிழ் மருத்துவத்தின் அடித்தளம் என்ற கருத்திற்கு வலிமையூட்டுகிறது.

எதிரணக் காக்கும் அறிவினுர்க் கில்லை
அதிர வருவதோர் நோய் — குறள். 429.

என்ற குறள் அறிவுடைமையைப் பொதுவாக வலியுறுத்திருலும், நோய் தடுப்பை வலியுறுத்துவதற்கு ஆணித்தரமான சான்று.

உற்றநோய் நீக்கி அமை முற்காக்கும்
லெற்றியார் பேணிக் கொளல் — குறள். 442.

என்ற குறளின் பொருளையும் மருத்துவக் கண்களோடு வாசித்து பொருள் நோக்கி மகிழத் தக்கது.

உலகில் எல்லாப் பகுதிகளிலும், மனிதனின் குறிக்கோள் சாவு, பிணி, முப்பு, இவைகளை வெல்வதே என்பதை வரலாறு காட்டும். சமய இலக்கிய, இதிகாச புராணங்களில் அமுதத்தையும், மேலைநாட்டார் இலக்கியங்களில் உயிர் நிலைத்தலைக் காக்கும் மருந்தையும் (Elixir of life) குறிப்பிட்டிருப்பதை வாசித்திருக்கிருேம். சாவை, வெல்வதே மருத்துவத்தின் குறிக்கோள் என்பதை 'மறுப்பது சாவை மருந்தெனலாகும்' என்ற குறள் 82 என்ற குறட்பாவாலும் உய்த்துணரலாம்.

நோய் என்பது உடலுக்கு வரும் பிணி மட்டுமல்ல, உளநோயையும் குறிக்கும். உடல் நோய், உளநோய் இரண்டுமே தவிர்க்கக்கூடியது என்று கொள்ளலாம்.

'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய் — குறள். 360

என்ற குறளில் நோய் என்ற சொல்லைத் துன்பம் என்ற பொருளில் தான் நாம் கொள்கிறோம் என்றாலும் அந்தக் குறளை மருத்துவக் கண்ணோடு நோக்குங்கால் மருத்துவ அடிப்படையும் தோன்றும். இரத்த கொதிப்பு, வயிற்றுப்புண், ஈழை நோய் என்றிப்படி பல நோய்களுக்கும் காமம், வெகுளி, மயக்கம், அதாவது அளவுக்கு மீறிய அவா, சினம், தவறான மனோநிலை, ஆகிய இவையே காரணம் என்பது இன்றைய ஆராய்ச்சி யாளர் முடிபு.

நோய் என்ற சொல் திருக்குறளில் பல இடத்திலும் துன்பம் என்ற பொருளில் தான் ஆளப்பட்டிருக்கிறது.

'தீப்பால தான் பிறர்கண் செய்யற்க நோய்பால
தன்னை அடல் வேண்டாதான்' — குறள். 206.

'உற்ற நோய் தோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அன்றே தவத்திற்குரு' — குறள் 261.

'அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின் நோய்
தன்நோய் போல் போற்றாக்கடை' — குறள். 315

'நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டுபவர்' — குறள். 320

'சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய் — குறள்' 359.

என்றிப்படி பல குறள்களில் நோய் என்ற சொல் இடம் பெறுகிறது. பிணி யும் ஒருவகைத் துன்பம். அதனால் நோய் என்று குறிக்கப் பெறலாம் என் பது ஆங்கிலத்தில் 'Affliction' என்ற சொல்லை நினைவூட்டுகிறது. வள்ளு வரே மனநிலை மாருட்டத்தைக் குறிக்கவும் நோய் என்ற சொல்லையே பயன்படுத்துகிறார். காமத்துப் பாலில் பசலை நிலையை குறிக்கும் போது

'மறைப்பேன் மன்யானிஃதோ நோயை இறைப்பவர்க்கு
ஊற்று நீர் போல மிகும்' -- குறள். 1161.

சாயலும் நாணும் அவர் கொண்டார் கைம்மாறு
நோயும் பசலையும் தந்து — குறள். 1183.

(தொடரும்).

# மருதை சமைத்த கீரை

## சிறுவை அனசூயா மோகனசுந்தரன்

திருப்பாலவனம் எனும் ஊர் தமிழகத்தில் ஒரு சிறந்த சிவத்தலம். சோழன் காலத்து 72 கல்வெட்டுகளை உடைய கோயில் ஒன்றுள்ளது. பாசி படராத திருக்குளம் உடையது இவ்வூர்.

இவ்வூரில் கழனி வேலைகளை முடித்துக் கொண்டு மருதையும் வேலனும் வரப்புமேல் நடந்து வரும் நடையே ஒரு அலாதியான காட்சி. ஆணும் பெண்ணுமாக இவர்கள் நடந்துவரும் நடையழகைக் கண்டு பலர் வியந்தனர். அவ்வியப்பிற்கு காரணம் இவர்களது நோயற்ற வாழ்வு அழகிய உடற்கட்டேயாகும். பண்பாடமைந்த இவர்களது வாழ்க்கை அவ்வூர் மக்களுக்குப் புதுமையாகவும் பொருமையாகவும் இருந்தது.

இப்படி ஒத்த பண்பும் ஒத்த குணமும் வாய்ந்த இவர்களது வாழ்க்கையில் குழந்தைப் பேறு இல்லை. குழவி இன்பத்தை நூலளவே கண்ட மருதை தனக்கென்று குழந்தை இல்லையே என ஒரு சில சமயம் ஏங்குவாள்; நீள நினைந்து தவிப்பாள்.

மருதை தன் வீட்டின் பின்புறத்தில் உள்ள தோட்டத்தில் மா, தென்னை, வாழை, முருங்கை, கொய்யா, கிச்சிலி முதலிய மரங்களையும் முல்லை, நந்தியாவட்டை, சப்பாத்தி, பவழமல்லி முதலிய மலர்ச் செடிகளையும், கத்தரி, வெண்டை, பூசனி, மிளகாய் முதலிய பருவச் செடிகளையும், தூதுவளை, மணத்தக்காளி, அரைக்கீரை, கரிசலாங்கண்ணி, பொன்னாங்காணி முதலிய கீரை வகைப் பயிர்களையும் வைத்து அதனை நாளும் போற்றி வளர்த்தாள். ஓரிரண்டு குழந்தைகளுக்கு பதில் ஒரு அலாதியான பெருமை கொண்டாள்.

இப்படிப்பட்ட பண்பாடுடைய குடும்பத்தை, சுறுசுறுப்புள்ள குடும்பத்தைக் கண்டால் யாருக்குத் தான் பொருமை வராது. குறைந்த உழைப்பு—அதிக வருவாய், அல்லது அதிக நலம் அல்லது உழைக்காமலே பிறர் உழைப்பில் தாங்கள் பங்கு கொள்ளவும், பிறர் உழைப்பில் அல்லது வெற்றியில் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தும் சிலர் வேலன் மருதை உழைப்பில் சிறிது காழ்ப்பே அடைந்தனர். இது உலக இயற்கையில் ஒன்று தானே. பல்லோர் பழிப்பினும் வேலன் மருதையின் குடும்பம் இலட்சியக் குடும்பமாய்த் திகழ்ந்தது. இவர்கள் வாழ்க்கை இப்படி ஒளிபடத் திகழ்வதற்குக் காரணம் இவர்கள் நோயற்ற வாழ்வில் வாழும் வாழும் வாழ்க்கையின் இரகசியம் ஒரு நாள் வெளிப்பட்டுவிட்டது.

ஒருநாள் திருப்பாலைவனம் நாட்டாண்மைக்காரன் பாண்டியன் வேலனைத் தேடிச் சென்றான். வேலன் அப்பொழுது தான் கழனியிலிருந்து வந்து, மனைவி அன்புடன் பிசைந்து தரும் கீரைச் சோற்றை சாப்பிட்ட வண்ணம் இருக்கிறான். இதனை அறிந்த நாட்டாண்மைக்காரன் வேலன் வருகையை நோக்கித் திண்ணையிலேயே உட்கார்ந்தார். துண்டை விரித்துப்போட்டு உட்கார்ந்த நாட்டாண்மைக்காரப் பாண்டியன், வேலன் மருதை உரையாடலைக் கவனித்த வண்ணமும் இருந்தான். தான் வந்திருப்பதை அவர்களுக்குச் சொல்லவே இல்லை.

மருதை : அத்தான்! இன்றுகரிசலாங்கண்ணி பருப்பு கூட்டுஎப்படி?

வேலன் : கூட்டா இது! சுவையா இது! மாம்பழ இனிப்பும், பலாபழத்தில் உள்ள தேன் சுவையும் கலந்தல்லவா இருக்கிறது?

மருதை : யாமா! என்ன கவிஞராகி விட்டீரோ?

வேலன் : இதற்குக்கூடவா கவிஞன் தேவை. உனது கீரைச் சோறு மாவின் சுவை அதிலுள்ள உன் அன்பு பலாவின் தேன் சுவை, அச்சோற்றில் நீ உன் காதலையுமல்லவா பிசைந்து தருகிறாய்.

மருதை : மாமா! அப்படி ஒன்றுமில்லே. கரிசலாங்கண்ணி கீரைக்கே அச்சுவைகள் உண்டு. எங்கப்பா இக்கீரையைப் பற்றி கதை கதையாய்ச் சொல்லுவார். அத்தான்; கரிசலாங்கண்ணி ஒரு பருவச் சிறுசெடி. தரையோடு படர்ந்து கிளைகள் மேலெழுந்து நிற்பதுமுண்டு. இதில் கறுப்பு, மஞ்சள், சிகப்பு, வெள்ளை என நான்கு வகைகள் உண்டு. முதல் 3 வகையும் பெரும்பாலும் கிடைக்காது. கிடைப்பது அருமையே.

வேலன் : போதும், போதுப இக்கீரையால் என்ன பலன். அதைப் பற்றி முதலில் கூறு?

மருதை : அத்தான்! நான் சொன்ன நான்கு விதக் கரிசலாங் கண்ணி வகையிலும் மஞ்சள் வகை இருக்கிறதே அது மிகவும் நல்லது. மஞ்சள் வகையை 'பொற்றலே' என்பர்.

வேலன் : மஞ்சள் நிற பூக்களை உடையதாயும், அப்பூ பொன் னிறம் உடையதாயும் இருத்தலின் அதனைப் பொற்றலே' என்றனர் போலும்.

மருதை : ஆமாம் மாமா! உண்மைதான். இதனைக் 'கையாந்த கரை' எனவும் வழங்குவர். இதனை உண்டால் விழிக்கு ஒளியையும், அறிவுக்குத் தெளிவையும், குன்மக்கட்டி நீங்கும் தன்மையும் பெறலாம் என்பர். இராமலிங்கர் தனது திருவருட்பா ஆருவது திருமுறையில், 'கரிசலாங்கண்ணி நினைவாற்றலுக்கு நலஃது' எனக் கூறுகிருர். மேலும் பலவித செந்தூரங்கள் செய்யவும், காது நோய், கண் நோய், காசம், இருமல் நோய் முதலியவைகளுக்கு இது கண்கண்ட மருந்துங்கூட.

வேலன் : மருதை! நீ பலே பேர்வழி. உனக்கு இதுவரை தமிழ்ச் செய்யுள்கள் தான் தெரியும் என்று நினைத்தேன். கீரைக கதைகளும் தெரிகிறதே?

மருதை : மாமா! கீரைப்பாத்தியிலே இருந்து கொஞ்சம் கீரை கேட்கத் தான் ஒருவர் வந்து திண்ணையிலே உட்கார்ந்திருக்கிருர். சீக் கிரம் மென்று சாப்பிடுங்கள்.

வேலன் : மருதை நீ என் மனைவி மட்டுமல்ல; நான் பெற்ற செல் வம் அல்லது கண்ட செல்வம், கொண்ட செல்வம் என்று கூறலாம். கீரைச்சோறு போதும். கொஞ்சம் மோர் போடு. நேற்று பொன்னுங் கண்ணி கீரையை மிளகு போட்டுத் துவட்டி வைத்தனையே, அது இதை விடச் சுவையாக இருந்தது. அதனைக் கண்ணிற்கு நல்லது என்று கூடச் சொல்கிருர்களே?

மருதை : ஆமாம் அத்தான்! கீரை வகைகளில் சிறந்தது 'பொன் னுங்காணி கீரையே. மிருகங்களில் அரசன் சிங்கம் என்பது போல கீரை வகைகளில் அரச பீடத்திற்கு உரியது 'பொன்னுங்கண்ணி'

வேலன் : அப்படியா மருதை. நம் மக்கள் ஏன் இந்தக் கீரையை அடிக்கடி உபயோகிப்பதில்லே?

மருதை : அதுவா அத்தான். அக்கீரையை கொஞ்சம் பொறுமை யாய் ஆய்ந்து பறவைகள் பூச்சிகள் எச்சங்களை நீக்க வேண்டும். தமிழ்க் குடும்பங்களே இப்பொழுது மிகவும் சோம்பிக் கிடக்கின்றன மாமா! தமிழர் பிற நாட்டார்க்கு மட்டும் அடிமைகளாய் வாழ்ந்தாரில்லே. பிற நாட்டு நாகரிகத்திற்கும் எப்படியோ அடிமையாயினர். தமிழர் தங்களைப் பற்றியே கவனிக்காமல் இருந்ததன் பயனுக இன்று தமிழ் மொழி பிற மொழிச் சேர்க்கையால் எவ்வளவோ நலிவுற்று இருக்கிறது அதைப் போலவே தம்மைப் பற்றி கவனியாது விட்டுவிடவே இன்று தமிழர் உடல் நிலே பல பிணிகளுக்கு உள்ளாகி, தமிழன் உருவம் மெலிந்தும் கைகள்

மிகச் சூம்பியும் வளைந்த மார்பும், தாழ்வுற்ற பார்வையும் வாய்ந்து இருக்கின்றனர். இவையெல்லாம் போலி நாகரிகங்களின் கோளாறு. பாதி சோறும் பாதி கீரையும் உண்டபோது தமிழர் நேர்கொண்ட பார்வையும், அகன்ற மார்பும், வலுவுடைய கைகளும், தளராத நடையும், கண்களில் கண்ணாடி இல்லாமலும் திகழ்ந்தனர். அன்று தோளினைக் கண்டவர்கள் தோளினையே கண்டு மகிழ்ந்தனர். காலினைக் கண்டவர்கள் காலினையே கண்டு மகிழ்ந்தனர். இவையெல்லாம் மறைவுறக் காரணம் தான் உண்ணும் உணவில் கீரைக் கறியமுது உண்பது மிகக் கேவலம் என நினைத்தனர். இன்றையத் தமிழர் கீரையை ஒதுக்கி வாழ்வது நாகரிகம் என நினைந்தும் விட்டனர் சிலர்.

வேலன் : அடி மருதை! என்ன நீண்ட ஒரு சொற்பொழிவே செய்து விட்டாயே. போதும்; பொன்னாங்காணி கதை தெரியாது போலும் உனக்கு. ஏதோ கதை அளக்கிறாய். அதனுடைய குணங்களை பற்றி சொல்லவில்லையே.

மருதை : மாமா! பொன்னாங்கண்ணி என்றால், பொன்—ஆம்—காண்—நீ— அதாவது ‘இதனை உண்டால் உன் உடல் பொன்னாகக்காண்பாய்’ என்பது பொருள். ஆகவே இதனை அரச கீரை என்று வழங்குவதில் என்ன குற்றம்? பொன்னாங்கண்ணி கீரையை, புளியை நீக்கி உப்பும் மிளகுமிட்டு வதக்கி வெண்ணெயுடன் கலந்து 40நாள் இடைவிடாது உண்டால் உடல் பொன்னிறம் ஆகும். மேலும் இக்கீரை அழகு பெறவும். நீண்ட ஆயுள் பெறவும் கண் குளிர்ச்சியடையவும் உதவும். மருத்துவர் கண் காசம், கண் புகைச்சல், கருவிழி நோய், வாயு, அனல், ஈரல்நோய் கீழ் வாயில் உண்டாகும் நோய்கள் நீங்கும் என்பர். அதுமட்டுமா— அதன் தைலம் உபயோகிக்க 96 வகை கண்நோய், அழல்நோய் தீரும் என்பர். கீரை பல மருந்துகள் செய்யத் துணையாகவும் இருக்கும். செம்புச் செந்தூரம் செய்யவும் உதவுமாம். இதனைக் காய கற்பப் பூண்டு என்றும் கூறுவர் தமிழர்.

வேலன் : (சாப்பிட்டு வெளியே வந்து) வணக்கம்! பாண்டியரே! நீண்ட நேரம் ஆயிற்றோ? தாங்கள் வந்திருப்பதாக ஒரு குரல் கொடுத்திருந்தால் தாங்களும் உடனிருந்து உண்டிருக்கலாமே. அந்தோ! தங்கள் வரவு தெரியாமலே போயிற்றே. மன்னிக்கவும். வந்த வேலை?

பாண்டியன் : வேலா! நீயே நற்றமிழ்ச் சாத்தன். உனது வாழ்க்கையே வாழ்க்கை. உள்ளே நீ நடத்திய உரையாடலில் — நான் ஒளிபெற்ற மனிதனாகி விட்டேன். நேரம் அதிகமாகிறது. எனது மகள் மேகலைக்குக் கண்நோய். கொஞ்சம் பொன்னாங்கண்ணி கீரை தருவாயா?

வேலன் : பாண்டியரே! அது என்ன அப்படிக் கேட்டுவிட்டீர். அதிகமாகவே தருகிறேன். நீங்களும் அக்கீரையைப் பயிர் செய்யலாம் (என்று சொல்லிக்கொண்டே உள்ளே போய், கைநிறைய பொன்னாங்கண்ணிக் கீரை கொண்டு வந்து பாண்டியரிடம் கொடுத்தான்.)

பொன்னாங்கண்ணி கீரையைப் பெற்ற பாண்டியன், “சிறந்த எழுத்தாளன் என்று பெயர் பெற்ற எனக்கு, மூக்குக் கண்ணாடியின் தடிப்பு நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே போகிறதே — எனக்கு இப்படி ஒரு மருதை கிடைக்கவில்லையே!” என்று மனத்திற்குள் அங்கலாய்த்துக் கொண்டான்.

❋

## பொருள்களின்
# குண விளக்கம்

[ சென்ற மாதத் தொடர்ச்சி]

### மட்டிப்பாற் குணம்

தலைவலி நீரேற்றந் தனித்த வுடல்வாத
மலைவுறு மேல்வாந்தி யரோசி-நிலைகுலையும்
வட்டுப்பால் வஞ்சம் வைத்த மாமுலை மாதே மணக்கு
மட்டுப் பாலிற்கு மருண்டு.

(இ-ள் ) சூதாடு கருவியை வெற்றிகொள்ளும் வஞ்சம் பொருந்திய தனங்களையுடைய பெண்ணே ! வாசனையையுடைய மட்டிப்பாலினால் தலைவலி சலதோஷம் பாதக்ஷேபகவாதம் கபவாந்தி அருசி இவை போகும்.

### காட்டுப்பிராய், ஈழத்தலரி இவைகளின் பாற்குணம்

காட்டுப் பிராய்ப்பாலோ காணுகின்ற பல்வலியை
நாட்டில்வைக்க தோட்டிவிடு நங்கையே கோட்டாரும்
ஈழத்தலரிப் பாலேறுபுரைப் புண் தொடையின்
வாழைப் புற்றும் போக்கு மால்.

(இ-ள்.) காட்டுப்பிராய் மரப்பால் தந்த நோயை நீக்கும். இழத்தலரிப்பால் புரை விரணத்தையும் தொடை வாழைப்புற்றையும் விலக்கும்

### சங்கன்முட்செடி, புங்கமரம் இவைகளின் பாற்குணம்

சங்கம்பால் விக்கமதைத் தான்போக்கு நீர்வடிக்கு
மங்குசுர வெப்பகற்று மையமிலை-கொங்குலவு
புங்கம்பால் புண்ணாற்றும் பொல்லாத வாய்வகற்றுந்
தங்கம்போன் மெய்யளிக்குந் தான்

(இ-ள்.) முட்சங்கன் வேர்க்கட்டையை மெல்லியதாய் சீவிப் பிழிந்தபால் சோபையையும் நீரேற்றத்தையும் சுரவேகத்தையும் நீக்கும் முன்போல் பிழிந்த புங்கம்பால் விரணத்தையும் நீக்கும் தேகத்தில் பொன் ஒளியுண்டாகுமென்க.

## தில்லை மரத்தின் பாற்குணம்

பாரிசவா தஞ்சன்னி பாதஞ்சூலங் குஷ்டஞ்
சேருமுட வாதம்வலி சில்விஷம்போம்-பேருரைக்க
இல்லையில்லை யென்றேடு மெண்பது வாதமுமே
தில்லைமரப் பாலாற் றெளி.

(இ-ள்.) தில்லைமரப்பாலால் பக்ஷபாதவாதம் சன்னிபாதம்சூலை குஷ்டரோகம் முடவாதம் அமரகண்டன் முதலிய ஐவகைவலிகள் சிலவிஷம் 80- விதவாத ரோகங்கள் ஆகிய இவைபோமென்க.

## திருகுகள்ளிப் பாற்குணம்

வாத முடக்கலும் வன்கிரந்தி குட்டம் போஞ்
சீதமொழியுங்கிருமி சேராவாம்-மாதே
பருகுபக்க நோயுடனே பாழ்ங்கரப் பான்றீருந்
திருகுகள்ளிப் பாலாற் றெளி.

(இ-ள்.) திருகுகள்ளிப்பாலினால் கஞ்சவாதம் கிரந்தி பெருவியாதி சீதக்கட்டு கிருமிரோகம் பக்கசூலை கரப்பான் இவைபோமென்க.

## சதிரக்கள்ளிப் பாற்குணம்

குட்டங் கடிசூலை குன்மமே கம்வாயு
துட்டக் கிருமியோடு தூறுபுண்ணு-முட்ட
முதிரக் கரப்பனும்போ மெய்குழலே நாளுஞ்
சதிரக்கள் ளிப்பாற்குத் தான்.

(இ-ள்.) நெருங்கிய கூந்தலையுடைய பெண்ணே! சதிரக்கள்ளிப் பாலால் குட்டம் கடி சூலை வாதப்பிரமேகம் வாதாதிக்கம் கிருமி நெளி கின்ற துவட்டவிரணம் கரப்பான் இவைகள் விலகுமென்க.

## மான்செவிக் கள்ளிப்பாற்குணம்

மான்செவிக் கள்ளிப்பாற்கு மாரு விரணங்கள்
ஏன்கிளைக்கு நன்மல மிறங்குங்காண்-ஊன்சேர்
விரிகிரந்தி நீங்கா வறட்சி சொறியோடு
பொறிகிரந்தி யும்போம் பொரிந்து.

(இ-ள்.) மான்செவிக் கள்ளிப்பாலால் ஆருதபுண்கள் மாமிசத்தைப் பற்றிய விரிக்கிரந்தி தேகவறட்சி படை பொரிகிரந்தி இவை நீங்கும் தோஷமற்றமலமுஞ் சாருமென்க.

## இலைக்கள்ளிப் பாற்குணம் இதுவே முயற்செவிக்கள்ளி

செய்ய கரப்பான் செவிநோய்வா தம் போக்கும்
யையவருஞ் சூலைதனைப் பாழாக்கு வெய்யின்மிக
வூது கிரந்தியோ டுட்புண்ணை யாற்றிவிடு
மேதுமிலைக் கள்ளிப்பா லோர்.

(இ-ள்.) இலைக்கள்ளிப்பால் செங்கரப்பான் செவிநோய் வாத விகாரம் சூலை விசர்ப்பிக்கிரந்தி உள்விரணம் இவைகளை நீக்கும்.

## கொடிக் கள்ளிப் பாற்குணம்

துய்ய கரப்பான் சொறிசிரங்கு புண்ணும்போஞ்
செய்ய கடிகுஷ்டநோய் சேருமே-மெய்யி
லடிக்கடி யாங்குன்மவலி யந்தனையுந் திருங்
கொடிக் கள்ளிப்பாலுக்குக் கூறு.

(இ-ள்) கொடிக்கள்ளிப்பாலால் கரப்பான் சொறி சிரங்கு பெரு விரணம் அக்கினி கீடக்கடி குஷ்டம் அடிக்கடி வலிக்குங் குன்மம் இவைகள் போமென்க.

## எருக்கம் பாற்குணம்

எருக்கம்பாற் கட்டிகளை யேகரைக்கும் வாய்வைத்
திருக்கறவே கொன்றுவிடுந் தீராச்-செருக்கான
சன்னிவலி தீர்க்குஞ் சார்ந்தபல சிந்தூர
முன்ன முடிக்குமென் றோர்.

(இ-ள்.) எருக்கம்பால் வாதக் கட்டிகளைக் கரைப்பதன்றி வாத நோய் சன்னிபாதம் ஐவகைவலி ஆகிய இவைகளைப் போக்கும் பற்பலசரக்குகளைச் சந்தூரஞ் செய்ய நினைக்கில் முடிப்பிக்கும்.

## வெள்ளெருக்கம்பாற் குணம்

வலியின் வலிசுளுக்கு மாவாதஞ் சன்னி
யெலியின் விஷஞ்சுரங்க ளெல்லாம்-வலியகற்றுக்
காலைத்தொழுதே கடற்புக்கும் வெள்ளெருக்கம்
பாலைத் தொடுவாரைப் பார்.

(இ-ள்.) வெள்ளெருக்கம்பாலால் ஐவகை வலியும் சுளுக்கும்மகா வாதம் சன்னிபாதம் எலிவிஷம் குளிர்ச்சுரம் இவைபோம்,

## காட்டாமணக்கின் பாற்குணம்

விழுமேக வெள்ளைகுன்ம மேல்விர ணந்தோலி
விழுமேருக் கட்டியிவை யெல்லாந் தொழுதோடுங்
கூட்டா மணக்குழம்பைக் கொண்டவணக் கொங்கை மின்னே
காட்டா மணக்கம்பாற் கண்டு.

(இ-ள்.) கலவைச் சாந்தணிந்த கொங்கைகளையுடைய பெண்ணே காட்டாமணக்கம்பாலால் மூத்திரத்தோடு விழுகின்ற மேகம் வெள்ளை வயிற்றுவலி குறிவிரணம் சருமக்கட்டி இவை நீங்குமென்க.

## எலியாமணக்கம் பாற்குணம்

எலியா மணக்கோ வெலிவிடம் வித்துப்பற்
பலவிடமு நீக்கிவிடும் பாரில்-வலுபேதி
யுண்டாகச் செய்யு முயிர்பிலீ கங்குன்ம
மண்டாம லோட்டுமி யாய்.

(இ-வி.) எலியா மணக்கின் பால் எலிவிஷம்பீஜவீக்கம் வண்டுகடி முதலிய பற்பல விஷம் பீலிகநோய் வயிற்றுவலி ஆகிய இவைகளை நீக்குவதுமின்றி அதிக விரோசனத்தை யுண்டாக்குமென்க.

## பிரமதண்டின் பாற்குணம்

கண்கூசல் கண்ணருகல் கண்ணெழுதல்
கண்சிவத்தலெல்லாங் கடித்தேகுந்-திண்ணச்
சரமதன் றளைப்பிளக்குஞ் சாயக்கண் மாதே
பிறமதண்டன் பாற்குப் போந்து.

(இ-வி.) பலம் பொருந்திய மன்மதனையும் வருத்துஞ் சயல்போலுங் கண்களையுடைய பெண்ணே! பிரமதண்டின் பாலால் கண் கூசுதல் கண்ணுறுறல் கண்ணீர் வடிதல் கண்வலி கண்சிவப்பு ஆகிய இவைகள் போமென்க.

(தொடரும்)

# தமிழ்த் திருமணம்

[ கி. இராமலிங்கனுர் எம்.ஏ., ]

## செய்முறையும் - விளக்கமும்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

### ii மணநிகழ்ச்சி முறை :

#### 8 வலம் வரல் :

முன்போல் மூன்றுமுறை வலம்வரப்பெறும். விளக்குத் தட்டில் முன் போலவே காசு இடுவதும் உண்டு. முதல் முறையில் பெண் வீட்டார் இட்டால், இந்த முறையில் ஆண் வீட்டார் இடுவர்.

#### 9 பாலும் பழம்

வலம் வந்து வீட்டுக்குள் சென்று அமர்ந்ததும், அலுப்புத்தீர, மண மக்களுக்குப் பாலும், பழமும் அளிப்பர். முதலில் மாப்பிள்ளைத் தோழர் பருகப் பின்பு, மணமக்கள் பருகுவர். மாப்பிள்ளைத் தோழர் பருகுவதற்கு முன் அவருக்குப் பரிசு அளித்து மகிழ்விப்பர் மணவீட்டார்.

### iii வாழ்த்துரைகள் :

மணமக்கள் நாற்காலிகளில் வந்து அவையில் அமர்ந்ததும், பெரி யோர்கள் அவர்களுக்கு நல்லுரைகள் கூறி வாழ்த்துவர்.

## II செய்முறை விளக்கம்

மேலே கண்ட ஒவ்வோர் இனமும் ஒரு நல்ல கருத்தை அடிப்படை யாகக் கொண்டது.

தமிழரின் திருமணம் பண்டைக் காலத்திலே சோலையிலே தான் முகிழ்த்தது. ஒருவனும் ஒருத்தியும், ஒருமனப்பட்டு அதற்கு அரச மரத் தைச் சான்ருக வைத்துக் கொண்டனர். தெய்வத் திருவருளால் திருமணம் கூடுகிறது என்னும் நம்பிக்கையுடையவர்கள் தமிழர்.

'மணப் பந்தர்' பண்டைக் காலச் சோலையை நினைவூட்டுவதா கும். தெய்வ அருளால் மணம் கூடுவதால், அச்சோலையை அமைப்ப தற்கு 'பந்தக்கால்' என்று தெய்வச் சடங்கு வைத்துக் கொண்டனர். அரசமரம் சான்ருவதைக் குறிக்க அரசாணிக்கால் நடப்பெறுகிறது.

மணமக்களிருவரின் இல்லற வாழ்க்கை நிறைவுற்றதாக அமைய வேண்டும் என்பதற்கு அறிகுறியாக இருநிறை குடங்கள் மங்கலத் தோற்றத்துடன் மணமக்கள் கண் முன்னே விளங்குவதற்கு அமையப் பெறுகின்றன.

மணமாகும் வரையில் மணமக்களின் நெஞ்சமாகிய குடத்திற்கு உள்ளேயிருந்த ஒளி விளக்கம், மணத்தினால், குடத்திற்கு வெளியேவந்து ஒளி வீசப் போகின்றது என்பதற்கு அடையாளமே குடவிளக்கு. இது அணையாமல் இருக்க வேண்டும். எனவே, இதற்கு இலை மறைப்பு. மண நிகழ்ச்சிக்குப் பின் இவ்விளக்கை விழிப்பாகக் கொண்டு சென்று வீட்டிற்குள் தூய இடத்தில் வைப்பர்.

முளைத்த நவதானியம், மணமக்களின் கண் எதிரே அழகு செய்து அவர்கள் ஒன்று பலவாக, அறிவில், திறமையில், ஆற்றலில், செல்வத்தில், சிறப்பில், பிறவற்றில் இனி முளைக்க வேண்டுமென்பதை அறிவுறுத்திக் கொண்டிருக்கிறது.

அம்மியும் குழவியும், மணமக்கள் எதைச் செய்தாலும் ஒன்றாக இருந்து செய்ய வேண்டுமென்பதை நினைவுறுத்தியபடி விளங்குகின்றன. அம்மி தெருவிலும், குழவி புறக்கடையிலும் இருந்தால், அவற்றால் ஏதேனும் பயனுண்டா?

தமிழ்த் திருமணப் பந்தரில் அம்மி மட்டும் போட்டு வைப்பதில்லை. குழவியும் இன்றியமையாமல் உடனிருக்கும். பிறவகை மணங்களில், அம்மி மட்டுமோ, அல்லது ஒரு கருங்கல் துண்டோ இருப்பதைக் காணலாம். 'அகலிகை' சாபத்தை நினைவூட்டவோ, மணமக்கள் ஏழடி நடப்பதில் முதலடி எடுத்து வைப்பதற்குப் பயன் படவோ எந்தக் கருங்கல்லுமே சாலுமேயென்று அவ்வகை மணங்களைச் செய்து வைக்கும் ஆசிரியர் கூறக் கேட்டதுண்டு.

கைவிளக்கு மங்கலநாண் சூட்டும்போது ஏந்தி நிற்கவும் வலம் வரும்போது ஏந்திச் செல்லவும் பயன்படுகிறது

கிளை விளக்கு அழகுக்கு மட்டுமன்று, ஒரு விளக்கணைந்தாலும் பிற விளக்குகள் எரியும். கிளைகளிலுள்ள எல்லா விளக்குகளும் ஒரே நேரத்தில் அணைந்து, அமங்கலம் விளைவித்து விடாது.

உலகமே ஆணும் பெண்ணுமாக இயங்குகிறது. உயிரற்ற பொருள்களிலும் ஆண் உண்டு பெண்ணுண்டு. மின்விசை ஒரு சடப் பொருளே. அதிலும் ஆண் ஆற்றல் பெண்ணாற்றல் இருப்பதை Positive Negative என்கிறோம். அண்டங்களையெல்லாம் நடத்திக் காத்துவரும் பேரறிவுப்

போற்றலுமான பரம்பொருளும் ஆணும் பெண்ணுமாக இயங்குவதை நம் முன்னோர்கள் உணர்ந்து அதனை அம்மையப்பர் என்றும், மாலும் திருவும் என்றும் போற்றுகின்றனர். அப்பரம் பொருளையே, உருவத்தில் மணமக்களை கண்டு வழிபடுதற்கேற்ற முறையில் இரு செம்புகளில் எழுந்தருளச் செய்வது மரபு. சைவ வைணவ நெறியினர் இருவருக்கும் இம் மரபு பொது.

மணமக்கள் அமரும் மனையின் அடியில் நெல்லோ, அரிசியோ இடுவது, அவர்கள் வாழ்வு, நெல்லுக்கும் அரிசிக்கும் குறைவு சிறிதும் இன்றி அமைய வேண்டும் என்னும் அவாவினைக் குறிப்பதாகும். வாழ்வுக்கு அடிப்படைப் பொருள் அவையேயன்றோ? 'அன்ன விசாரம் அதுவே விசாரம், அது ஒழிந்தால் தான் பிற விசாரங்கள்.

மணமக்களுக்கு நலங்கு வைப்பது, அவர்களை இல்லற வாழ்வுக்கு ஆயத்தமாக்கல். ஒரு மகிழ்ச்சியான நிகழ்ச்சி. மணமக்கள், சமுகத்தில் கலந்து பழகும் மனநிலையை வளர்ப்பது.

மண ஆடையை இறைவனுக்குப் படைத்து, அதற்கு அவையினரின் வாழ்த்தைப் பெற்று வழங்குவது, பெண்ணும் பிள்ளையும் முதல்முறையாக மணக்கோலம் பூண்பதற்கு திருவருள் துணையும் மக்கள் நல்லெண்ணமும் நிலவ வேண்டி.

அரச மரமே காதலன் காதலியர் இருவரது உள்ளங்களும் முதன் முதலில் சோலையில் ஒன்றியதற்குச் சான்றாக அமைந்தது. சோலையில் உள்ள தாவரங்களில் தலை சிறந்து ஓங்கி வளர்ந்தது. வாழ்வரசியர் கூடி அரசங்காலை நடுவது, மணமக்கள் அரசு போலப் பனெடுங்காலம் மங்கல வாழ்வு வாழ்ந்துவர வேண்டி.

பொங்கல் படையல்கள் திருமணப் பந்தரில் பணிபுரியும் தொழிலாளர்களுக்கு உரியன. மணமனை ஏறுவதற்கு முன்பு மணாளனும் மருட்டியும் அன்னதானம் செய்யும் நோக்கமுடையது. மணப்பொங்கல் சில குடும்பங்களில் இடுவதோ படைப்பதோ இல்லை

இருவரும் திருமணம் செய்து கொண்டு இல்லற வாழ்வை இனிது நடத்துவோம் என்னும் உறுதியை தெரிவிப்பதே, மணமக்கள் காப்பு அணிதல் சான்றாக நின்ற அரச மரத்துக்கு முன்னதாகக் காப்புக் கட்டுவது பொருத்தமே.

(தொடரும்)

# நோயும் மருந்தும்!

வினு: எனக்குக் கல்யாணம் ஆன வருடத்திலிருந்து ஒன்றன்பின் ஒன்ருக 5 கருச்சிதைவுகள் ஆகி விட்டன. (Abortion). தற்போது 12 வயது 8 வயதுடைய இரண்டு பிள்ளேகள் இருக்கிருர்கள். ஆனுல் முதலிலேயே எனக்கு உடம்பு மிகவும் கெட்டு போனதால் உடம்பு தற்போது மிகவும் பலஹீனமாக உள்ளது. தற்போது வயது 39. உடம்பில் இரத்தமில்லாமையால் அடிக்கடி தலேசுற்றல், ஞாபகமறதி, நரம்பு தளர்ச்சி அதிகமாக உள்ளது. பகலில் சாப்பிட்டஉடனே கட்டுக்கடங்காமல் தூக்கம் வரும். நான் ஆசிரியையாக வேலே பார்ப்பதால் சில நேரங்களில் இது மிக கஷ்டமாக உள்ளது. இரவு நன்ருக தூங்குகிறேன். இதயமும் உடலும் பலம் பெற என்ன செய்யலாம்?

விடை: சகோதரி 5 கருச்சிதைவுக்கு பின்பு குழந்தைகள் 2 இருப்பது மிகவும் அதிர்ஷ்டசாலியே முதலில் உன் உடம்பு கருச்சிதைவால் கலகலத்து விட்டது. இதனுல் நீங்கள் குறிப்பிட்ட நோய்குறிகள் உண்டாகிவிட்டன. கவலேவேண்டாம். அசோக மரப்பட்டையைஇடித்து பச்சையாகவே ½ படி நீர் விட்டுக் காய்ச்சி வடித்து தினமும் 40 நாளேக்கு 1 டம்ளர் வீதம் குடிக்கவும். காபி, டீ, குடிப்பதை நிறுத்தவும். இந்த அசோக மரப்பட்டை குடிநீர் செய்ய வசதி இல்லேயானுல், அசோக ரசாயனம் மருந்துகடைகளில் வாங்கி உபயோகப்படுத்த உமது உடல் நலம் பெறும்.

வினு: எனக்கு வயது 23. நான் தினமும் காலேயில் வெறும் வயிற்றில் சிறிதளவு வேப்பங்கொழுந்து தின்று வருகிறேன். இதனுல் ஏற்படும் நன்மை யாவை என்பது பற்றி கூறவும். அப்படி நன்மை ஏற்பட்டால் எத்தனே நாள் வரை சாப்பிட வேண்டும்.

விடை: ஐயா, தாங்கள் வேப்பிலேயை தினமும் சுண்டைக்காய் அளவு சாப்பிடுவதில் உடம்பிற்கு மிகவும் நல்லது. கபரோகம், பித்த சீதள வியாதிகள் யாவும் உடலே விட்டு நீங்கும். ஆனுல் இதனே 40 நாளி சாப்பிட்டு விட்டு விடவும்.

வினு: நான் ஐந்து மாதமாக ஒரு வகையான புழுக்களால் பீடிக்கப்பட்டு வந்தேன். அதை போக்க நான் டாக்டர்களை சந்தித்து அவர்கள் எழுதி கொடுத்த மாத்திரைகள் 'Piperabine' போன்றவை சாப்பிட்டேன். அரசாங்க ஆஸ்பத்திரியில் மாத்திரைகளை சாப்பிட்டேன். மாத்திரை சாப்பிடும் போது சுமாராக இருக்கிறது. சாப்பிடுவதை நிறுத்திவிட்டால் மீண்டும் தொற்றி கொள்கிறது. நான் பல மாத்திரைகளை சாப்பிட்டும் பலனில்லை. வயிறு, மார்பு, இடது, வலது போன்ற பாகங்களில் ஊசியால் குடைவது போன்ற தொந்தரவுகள் ஏற்படுகின்றது. உடலில் சக்தி இல்லாமல் மெலிந்துள்ளேன். பால் உணர்ச்சி எல்லாம் தடைப்பட்டுள்ளது. நான் Bsc மூன்ரும் ஆண்டு படிக்கிறேன். அண்ணன் ஆதரவில் படிக்கிறேன். தாய், தந்தையில்லை. அவர் கூலி வேலை செய்து குடும்பத்தையும் என்னையும் காப்பாற்றுகிருர். இந்த கவலையால் நான் நடை பிணம் போலவும், படிக்க வெறுப்பும் ஏற்படுகின்றது. தாங்கள் ஏழை மாணவனின் மீது கருணைக் காட்டி என்னை நம்பியுள்ள அண்ணன் வாழ்க்கைக்கும் வழிகாட்டி உதவுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

விடை: அன்புள்ள தம்பி, இவ்வளவு எழுதிய நீங்கள் உமது வயதைக் குறிப்பிடவில்லை. கல்லூரி மாணவனுன உனக்கு 23 வயது இருக்கலாம். உன் உடம்பு பூச்சிகளால் இருப்பதாக குறிப்பிட்ட உங்களுக்கு பூச்சி எல்லாம் ஒழிய குப்பைமேனி வேர், புளியங்கொட்டையளவு அரைத்து அதனுடன் வேப்பிலை அரைத்து புளியங்கொட்டை அளவு தினமும் இரண்டையும் சேர்த்து காலை மாலை சாப்பிட்டு வென்னீர் குடிக்கவும். இப்படி 10 நாள் செய்ய உன் உடலை விட்டு எந்தவித கிருமியும் தொலையும். ஆனந்த வாழ்வு பெறலாம். இப்படி செய்தால் உமக்கு பூரண குணம் கிடைக்கும்.

வினு: ஐயா, மூலிகை இனங்களில் தினமும் சாப்பாட்டில் கீரையினமாகவே கொண்டால் நல்ல சக்தி தரும் கற்ப மூலிகைகளைப் பற்றி சில சொன்ஞல் என் போன்ற ஏழை மக்கள் தினமும் உணவின் மூலமாக உட்கொண்டு சக்திபெற்று நோயற்ற வாழ்வு பெறுவோம் அன்பு கூர்ந்து இத்தகைய மூலிகைகளை கூறுங்கள்.

விடை ; அன்பரே ! இத்தகைய கேள்வி கேட்கும் மக்களேயில்லே. எல்லாம் மேனாட்டு உணவு முறைகளை பின்பற்றியும் மேல்நாட்டு மேனாட்டு பழக்க வழக்க உடைகள் பற்றியும் தான் தற்போது பேசப்படுகிறது. காப்பியடிக்கப் படுகிறது. இப்போதெல்லாம் சக்தி பெற ஆங்கில ஊசி மருந்துகளான ஆண்டிபயாடிக் (Antibyoties) என்ற ஊசி மருந்துகளைப் போட்டுக் கொண்டு பின் விளைவுகளால் அவஸ்தைப் படுகின்றனர். நீர் மட்டும்தான் கீரையினங்களில் சக்தி பெறும் இனங்களைக் கேட்டிருக்கிறீர்கள். சொல்கிறேன். அரைக்கீரை, பருப்புகீரை தூதுவளைக்கீரை, முருங்கைகீரை, பசலைக்கீரை, முசுமுசுக்கை, நீர்ஆரை கீரை, வல்லாரைக்கீரை ஆகியன. காயகல்ப சக்தி தரும் கீரைகள் இவைகளில் ஏதாவது ஒன்றை நெய்யுடன் தவருமல் 40 நாள் சாப்பிடலாம்.

வினா : அன்பும் பண்பும் ஒருங்கே இணைந்த மூலிகை மணி டாக்டர் கண்ணப்பர் அவர்களுக்கு; தங்களின் பத்திரிகையை தவருமல் படித்துவரும் பக்தர்களில் அடியேன் ஒருவன் என்று குறிப்பிட பெருமை கொள்பவன் யான். தங்கள் நாட்டு மருத்துவ முறையினல் பல நோய்கள் தீர்ந்துள்ளன. என்னிடம் உள்ள சில குறைகளை நீக்கி கொள்ள தாங்கள் அருள் மழை பெய்ய வேண்டும். எனக்கு வாய் அதிகமாக நாற்றமடிக்கிறது. எளிய முறை ஒன்றைக் கூறவும்.

விடை : பக்தரே ! கவலே வேண்டாம் ! வாய் துற்நாற்றமடிப்பது வயிற்றில் அதிக உஷ்ணமும், அழற்சியும் உள்ளது. எளிய முறை கரிசலாங்கண்ணி. அதை எடுத்து காலேயில் அரைத்து எலுமிச்சையளவு சாப்பிட உனது துர்நாற்றம் பறந்து ஓடி விடும்.

வினா: ஐயா ஏதாவது ஒரு பொருளை கொடுத்தாலோ எடுத்தாலோ என் கை நடுங்குகிறது. மிகவும் அச்சமாக உள்ளது. வயது 20 தான் ஆகிறது. இதைப் போக்க பதில் கூறவும்.

விடை : தம்பி, 20 வயதில் கை நடுங்குவது துர்அதிர்ஷ்டம் தான் வியாதியின் குறிப்புகளை சுருக்கமாகவே குறிப்பிட்டுள்ளாய். விரிவாக எழுதவில்லே. கை நடுக்கம் ஒரு பெரிய நோய் வருவதற்கு அறிகுறி. இதை நேரில் பார்த்து ஆலோசனை கூறுவது சிறப்பு. இருந்தாலும் முதல் சிகிச்சையாக "அமுக்கனங்கிழங்கு" எனும் நாட்டு மருந்து கடையில் விற்கும் மருந்தை வாங்கி பாலில் அவித்து உலர்த்தி, இடித்து

தூள் செய்து, 10 அரிசிகளை தினமும் பாலில் சாப்பிட வேண்டும். இதில் நரம்பு நடுக்கம் குறைவு படும். நோய் அதிகமாகாது. பிறகு உங்களுக்கு வசதி இருந்தால் நேரில் வரவும். நான் வேலூர் டாக்டர் என்பதால் சிலர் வேலூருக்கு போய் விடுகிறுர்கள். நான் வேலூரை விட்டு ஒரு ஆண்டு ஆகிறது. எனவே சென்னைக்கே வரவும்.

வினு: ஐயா, கை கால்களில் எப்போதும் வேர்வை ஊறிக் கொண்டே இருக்கிறது. எப்பொருள் கையில் வைத்திருந்தாலும் வேர்வை விடுகிறது. இது ஏதாவது ஒருநோயோ என அச்சமாக உள்ளது. தாங்கள் தான் ஒரு வழி கூற வேண்டும்.

விடை: தம்பி, இது நோயோ என அச்சப்பட வேண்டாம். இது பெரிய நோயின் அறிகுறி. இதற்கு காலை நேரம் கை நாடி பார்த்து சீதள நாடியின் தன்மையை அறிந்து, அதற்குத் தகுந்த வழி செய்ய வேண்டும். தபால் வழியில் இதனைப் பூரண குணப்படுத்த முடியாது. எனவே வசதி இருந்தால் நேரில் வரவும். இருந்த போதிலும் தூதுவளை கிரையை நெய் விட்டு வதக்கி பருப்பு போட்டு கடைந்து நாள்தோறும் சாப்பிட ஓரளவு குணம் கிடைக்கும்.

வினு: ஐயா, ஏலக்காய், லவங்கப்பட்டை, கிராம்பு, உண்பதால் ஏதாவது தீங்கு உண்டா? நன்மை தீமைகளைக் கூறவும்.

விடை: அன்புடையீர்! பட்டை, கிராம்பு, இவை இரண்டும் பசித்தூண்டி, செரிப்புண்டாக்கும் தன்மையுடையது. ஏலக்காய் நறுமணமுள்ள ஓர் 'ஜடராக்னி' விருத்தி செய்யும், ஆனல் இருதய நடையை சீர்கேடு செய்து விடும். தாதுவை உடைத்து விடும். இவைகளால் நன்மை தீமை இரண்டும் உண்டு. அதாவது அடிக்கடியும் தினந்தோறும் சாப்பிடுவதால் கேடு வரும். 15 நாட்களுக்கு ஒரு முறை சாப்பிடுவதால் நன்மையுண்டாகும். இதை அனைவரும் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம்.

வினு: அன்புடையீர், நான் 10 ஆண்டுகளுக்கு தங்கள் கட்டுரைகளைப் படித்து பிறருக்கும் சொல்லி வருகிறேன். எனது வீட்டின் பின்புறம் கற்பூரவல்லி, முசுமுசுக்கை, புதினு, முருங்கை, செம்பருத்தி, சுண்டை, அருகம்புல் போன்றவை

களை பயிர் செய்துள்ளேன். என்றால் இயன்றவரை மற்றவர்களுக்கும் மூடிகைகளைப் பற்றி சொல்லி வருகிறேன். இப்போது எனக்கு ஒரு பிரச்னே. தாங்கள் தான் தீர்க்க வேண்டும். எனது பையனுக்கு வயது 4. நெஞ்சு சற்று முன்புறமாக வந்துள்ளது. அதனால் அடிக்கடி சளி கட்டிக் கொள்கிறது. காய்ச்சல் வருகிறது. அத்தகைய நேரங்களில் ஆங்கில மருத்துவம் பார்க்க நேரிடுகிறது. 'Leder mycine syrup' போன்றவைகளையும் வேறு பல ஊசி மருந்துகளும் கொடுக்க வேண்டியிருக்கிறது. என்றால் மற்றவர்களுக்கு வைத்தியம் செய்ய முடிகிறது. தங்களது அயராத தொண்டினால், ஆனால் என் மகனுக்கு இந்த சளி நெஞ்சில் சளி சேர்வதை நிறுத்த என்ன செய்வதெனத் தெரியவில்லை. சுமார் 2 மாதங்களுக்கு முன் சென்னை வந்தேன். தங்களை நேரில் காணும் பேறு பெற்றேன். தாங்களும் சில குழந்தைகளுக்கு அப்படி இருப்பது பெற்றோரின் உடற்கூறு தான் காரணமென்று கூறினார்கள். என்றால் குழந்தையை நேரில் எடுத்துவர வசதியில்லை. தயவு செய்து சளி நெஞ்சில் கட்டாமலிருக்கவும், காய்ச்சல் வராமலிருக்கவும் வழி சொல்லுங்கள். முசுமுசுக்கையை வாரம் 1, 2 முறை கொடுக்கிறேன். வேறு என்ன செய்ய வேண்டுமெனக் கூறுங்கள்'

விடை: அன்பரே, உமது வீட்டின் பின்புறம் மூலிகைகள் வளர்ப்பதைப் பற்றி கூறினீர்கள். ஆனால் தூதுவளையைக் குறிப்பிடக் காணோம். அடுத்து பலருக்கு வைதியம் செய்து வெற்றி கண்டிருக்கிறீர்கள். ஆனால் தனது குடும்பத்திற்கு என்று வரும்போது பையனுக்கு இதைக் கொடுப்பதா? என்று மூளை குழம்புகிறதா? இது உங்களுக்கு மட்டுமல்ல, உலகில் எந்த மருத்துவருக்கும் அப்படித்தான் வரும். இதற்கு காரணம் என்ன என்றால் குடும்பப் பற்றும், ஆசாபாசங்களும் தான் காரணம். எனவே தான் எந்த ஒரு மருத்துவரும் தானே வைதியம் செய்வதில்லை. பிற மருத்துவரிடம் தான் காட்டுவார்கள். தனக்கே எல்லாம் தெரியுமென்பது இறுமாப்பு. நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். நெஞ்சு சற்று முன்பாக வந்துள்ளது. காய்ச்சல் வருவது என்று குறிப்பிட்டுள்ளீர்கள். இது நிச்சயம் கணைச்சூடு. நேரில் பார்த்து ஆலோசனை கூற வேண்டும். குழந்தையின் மீதுள்ள அதிக ஆசையின் காரணமாக ஆங்கில மருத்துவரை நாடினீர். அது சரியாகுமோ? ஒன்று மட்டும் கூறுகிறேன். தூதுவளை வதக்கி பருப்புடன் நன்றாக கடைந்து கீரைக்குழம்பு வைத்து நாள் தவறாமல் நாலுப்பிடிச் சோற்றில் கொடுக்கவும். இது கொடுக்கும்

முன்பு அருகம்புல் முறிவு ஒரு வாரம் கொடுக்கவும். இதில் பையனுக்கு நிச்சயம் குணம் தெரியும். இந்த காலத்தில் கண்டிப்பாக ஆங்கில மருத்துவரிடம் காண்பிக்காதீர். தூதுவளையை உங்கள் வீட்டின் பின்புறம் மற்றமூலிகைகளோடு வளர்க்கவும். குணம் இல்லையென்றால் நேரில் தான் வர வேண்டும்.

வினு: ஐயா, கார்த்திகை மாதத்தில் ஆண்டு மலர் வெளியிடும்போது விலை Rs 2 00 அல்லது Rs 3 00 ஆனாலும் நிறைய கட்டுரை வெளியிடுங்கள். ஜட்ஜ் பலராமையயா டாக்டர் வேணுகோபால், தியாகராஜன், ரமணன் போன்ற அறிஞர்களின் ஆய்வுக் கட்டுரைகள் நிறைய வரவேண்டும். இறைவன் நீண்ட ஆயுளைக் கொடுத்து சித்த மருத்துவ புரட்சி திக்கெட்டும் முழங்க செய்யட்டும்.

விடை: நான்மூலிகைமணியை1964-ல்ஆரம்பித்தேன்.ஆரம்பித்த போது விலை 50 பைசா. வருட சந்தா ரூ. 6. இப்போது 1976. இப்போதும் கூட ஒரு பைசா கூட விலை ஏற்றவில்லை. மாருக பக்கங்களைக் குறைத்து விட்டேன். காகிதப் பற்ருக் குறையினுல் அப்படியிருந்தும் எனக்கு பத்திரிகை நடத்துவதில் நட்டந்தான். மூலிகையின் பயனை மக்கள் அறிய வேண்டும் என்னும் ஒரே ஆசையால் ஏற்றவில்லை. இந்த நிலையில் ரூ. 2 அல்லது ரூ. 3 என ஏற்றச் சொல்கிறீர்கள். ஏழை மக்கள் எப்படி வாங்குவார்கள? எனது குறிக்கோள் நவீன மருத்துவ முறையை செய்ய முடியாத ஏழைகள். மூலிகைகளால் பயன் அடைய வேண்டும் என்பதே ஆனல் ஒன்று மட்டும் நிச்சயமாகக் கூறுவேன். அடுத்த ஆண்டு 1977 முதல் பிரதி ஒன்றுக்கு விலை ரூ. 1 இருக்கும். பக்கங்களையும் சில கூட்டுவேன் இந்த சக்தியையும் எனக்கு முருகர் அருளுவார்.

---

# இதய ஒலி

இளந்தென்றல்
6/61 ஆலை வீதி
குயவர்பாளையம், புதுவை

அன்புடையீர்!

மூலிகை மணியின் ஆயிரக்கணக்கான வாசகர்களில் நானும் ஒருவன் என்று கூறிக் கொள்வதில் பெருமை கொள்பவன் நான். மூலிகை மணியின் ஒவ்வொரு இதழையும் தவருமல் படித்து வரும் நான், அதில் வரும் சிறந்த மூலிகைகளைப் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை தொகுத்து 'பைண்ட்' செய்து வைத்துள்ளேன். அவ்வப்போது அதில் குறிப்பிட்டு உள்ள மூலிகைகள் கிடைக்கும்போது தங்களின் ஆராய்ச்சிக் குறிப்பின்படி அம்மூலிகைகளை உபயோகித்து, சிறந்த பல பயன்களைப் பெற்றுள்ளேன். இவ்வாறு நம் வீட்டினுள்ளேயே மறைந்து கிடக்கும் மூலிகைப் பற்றியும் கிடைக்க கடினமாக வேறு பல மூலிகைகளைப் பற்றியும் சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதி வெளியிடும் தாங்கள் இன்னும் நூருண்டு காலம் வாழ்ந்து மக்களுக்கு இன்னும் பல்வேறு மூலிகைகளைப் பற்றி பற்பல செய்திகளை அறிவித்து, பல்லாண்டு காலம் நலமுடன் வாழ இறைவனைப் பிரார்திக்கிறேன்.

அன்பன்
இளந்தென்றல்

வரதராஜன்
செங்குந்தர் வீதி, பாண்டி.

அன்புடைய ஐயா,

தங்களின் நேத்திரப் பூண்டு தைலம் மக்களுக்கு ஒரு வரப்பிரசாதம் என்ருல் மிகையாகாது. இங்கு நடந்த கருணாநிதி கண் சிகிச்சை முகாமில் எனக்கு கண்ணாடி கொடுக்கப்பட்டு, அறுவை சிகிச்சையும் செய்தார்கள். அதனல் ஒருவித பலனும் இல்லை. அதன் பிறகு ஒரு பாட்டில் நேத்திரப்பூண்டு தைலம் தபால் வழி 23.00 செலுத்தி பெற்று தினம் ஒரு துளி வீதம் தான் காலையில் போட்டு வந்தேன். இதனல் எனக்கு அரை பார்வையாவது கிடைத்ததற்கு நான் உங்களை 'கண் கொடுத்த கண்ணப்பர்' என்று வாழ்த்துகிறேன். வாழ்க உங்கள் திருநாமம்!

இப்படிக்கு
வரதராஜன்

# அனுபவம் உணர்த்தும் உண்மை

ரங்கசாமி

சூர்யப் பாளையம்.

டாக்டர் அவர்களுக்கு வணக்கம். இப்பவும் தங்கள் மூலிகை மணியை கடந்த 6 ஆண்டு காலமாக படித்து வருகிறேன். நேற்று பிரண்டை பஸ்பம் செய்ய பிரண்டையை நறுக்கி கொண்டிருக்கும்போது விரல் வெட்டுபட்டு விட்டது. அதே பிரண்டையை வைத்து சதை பகுதியை ஒட்டி கட்டினேன். ஆச்சரியப்படும் வகையில் ரத்தம் நின்று விட்டது. இன்று வலியே இல்லை. கடந்த சில மாதமாக ஒரு பக்க மாக தலைவலி பகல் 11 மணி வரை இருக்கும் பிறகு சரியாகிவிடும். ஈரோடு கண் டாக்டரிடம் காட்டினேன். அதற்கு அவர் கண்ணாடி மாட்டி விட்டார் இருப்பினும் சரியாக வில்லை. வலது கண் மட்டும் கண்ணைச் சுற்றி சதைப் ,பகுதி உள்ளே சிவப்பாக உள்ளது. வலி எடுக் கிறது. ஆகவே, இன்று தங்களுக்கு 23.00 M. O. அனுப்பி உள்ளேன் பெற்று கொண்டு உடன் மருந்து அனுப்புக.

இப்படிக்கு
ரங்கசாமி

பொன்னுசாமி

மதுரை

ஐயா,

நான் மூலிகை மணியை தவறாமல் படிப்பவன். எனக்கு சில நாட் களாக கண் பார்வை மங்கலாக இருந்தது. பிறகு நான் 23.00 M. O. செய்து நேத்திரப்பூண்டு தைலம் வாங்கி உபயோகித்து குணம் அடைந் துள்ளேன்.

இப்படிக்கு
பொன்னுசாமி

---

வெளியிடுபவரும் ஆசிரியரும்; வேலூர் மருத்துவர்
ஆ. இரா. கண்ணப்பர், R.M.P. 7, அருளாம்பாள் வீதி, தி. நகர்
சென்னை - 600 017, மூலிகை மணி அச்சகத்தில் அச்சிட்டவர்:
K. பாபு. D.M.E., சென்னை - 600 030